ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஸ்தோத்ரரத்நஸாரப்ரகாஸிகை.

என்னும்.

ஸ்ரீ ஆளவந்தார்ஸ்தோத்திரப்ரதிபதவ்யாக்யாநம்.

இஃது,

ப்ரபந்நஜநாக்ரேஸரரான

ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநத்திற்கு இணங்க

திருமலை - சங்கபுரம், ஸ்ரீமத் - உபய

வ ர தா சா ரி ய ரா ல்

ஸங்கிரஹிக்கப்பட்டு

சென்னைச்சருவகலாசாலைத் தமிழ்த்தலைமைப்புலவர்

ம-ா-ா-ஸ்ரீ,

கோ- இராசகோபாலபிள்ளையவர்களால்

தமிழ் பரிசோதிக்கப்பட்டு

யநமதல.

[illegible] வேங்கடாசாரியராலும்

இந்தக்ரந்த பிரதிகளை

வித்வான்களைப் பிரார்த்தித்துப் பெற்றுப் பிரகடநஞ்

செய்யப் பெருமுயற்சி செய்தவரும்

செங்கல்பட்டு டிஸ்ட்ரிக்டு கோர்ட்டுவகீலும்

ரா ம தா ஸ ரு மா கி ய

மாங்காடு- குப்புஸாமிநாயுடு

அவர்களாலும்

விவேககளாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்வபாநு - ௵



Madras.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

அகிலபாகவதோத்தமர்களுக்குவிஞ்ஞாபநம்.

ஸ்ரீஸேநாபதியாழ்வான் முக்யபரிஜநங்களில் ஒருவராகிய ஸ்ரீஸிவ்ஹமாநநருடைய அம்சாவதாரமாய்க் கலியுகத்தில் - சதகஎ- ஆவதான தாது ஸம்வத்ஸரம் ஆடிமீ பௌர்ணவமி உத்திராட நட்சத்திரத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் குமாரரான ஈஸ்வரமுநிகளுக்குக் குமாரராய்த்திருவவதரித்து, யமுனைத்துறைவர் என்னுந்திருநாமமுடைய ஸ்ரீயாமுநாசா



யர் ஸகலவித்யாபாரங்கதராய், வித்வஜ்ஜந கோலாஹலனென்னும் வித்வானைவாதத்தில்வென்று, அதற்குப் பந்தயமாய்க் கிடைத்த அர்த்தராஜ்யத்தைப்பெற்று, அத்தேசத்தரசனுடைய மஹிஷியாலே மனமகிழ்ந்து கொடுக்கப்பட்ட (ஆளவந்தார்) என்கிறதிருநாமமுடையாராய், மஹோந்நததசையில் எழுந்தருளி யிருக்கையில், ஸ்ரீ மணக்கால் நம்பிகள் மூலமாய் ஸகலஸம்பிர தாயார்த் தங்களையும் லபித்து, விஷயவைராக்யத்தாலே ஸந்யஸித்துக்கொண்டு, ப்ரபந்நஜந ஸார்வபௌமராய்க்கோயிலில் ஸித்தாந்த ப்ரவசநம் செய்துகொண்டு, தத்வஹித புருஷார்த்தயாதாத்மியோபதேசத்தாலே மந்தமதிகளாகிய சேதநரை உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளமாய், ஸர்வவேதாந்த ஸாரார்த்தங்களை ஸங்கிரஹித்து ஸ்தோத்திரமாக அருளிச்செய்தார். ... ... ... ... ... *

இதன் அர்த்தங்களைத்தமிழில் அச்சிட்டு ப்ரஸித்தப்படுத்துவதற்குக்காரணம்.—பரமகாருணிகனுகிய பகவான் அஜ்ஞனை அடியேனிடத்தில் நிர்ஹேதுக கிருபை செய்து சித்திரபாநுஹூ வையாசிமீ உஅவ சுக்கிரவாரம்இராத்திரி ஆர்பத்நட்ஹவுஸ் த்விபாஷியும், அடியேனுக்குத்தோழருமான ம-ா-ா-ஸ்ரீ- குமாரஸாமிநாயுடு கிருஹத்தில் ஸ்வப்நத்தில் அஸ்மதாசார்யரூபத்தாலேஎழுந்தருளி அப்படிப்பட்ட ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் அர்த்தங்களைத் தமிழில் உபந்யஸித்தருளினன்.

உடனே மஹாகுதூஹலத்துடன் இதை அடியேன் நித்யாநுபவம்பண்ணி உய்யும் வண்ணம், அவ்வர்த்தங்களை உபதேசிக்க வேண்டுமென்று ஸத்ஸம்பிரதாய வித்வான்களை ப்ரார்த்தித்ததன் பேரில் அவர்கள் ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்திருக்கின்ற வியாக்கியானத்திற்கிணங்க ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரத்திற்கு ப்ரதிபத வியாக்கியானமாகச்செய்து ப்ரஸாதித்தனர் ... ... ... ... *

அதை எல்லோரு மெளிதிலுணர்ந் துய்யும்படி அச்சிடுவித்தனன். இந்தஸ்தோத்திரரத்நஸாரப்ரகாசிகையைப்பகவத்குணாநுபவ சீலராகிய பரம பாகவதர்கள் எல்லோரும் திருவுள்ளம்பற்றி அடியேனது அபராதங்களைக்ஷமித்து அநுக்ரஹிக்க ப்ரார்த்திக்கின்றேன். ... *

இப்படிக்கி ஸ்ரீ பரமபாகவதர்களுடைய பாததூளியும்,

ராமதாசனுமாகிய

☞ மாங்காடு-குப்புஸாமிநாயுடு.

శ్రీమద్యామునమునయేనమః,

శ్రీరంగలక్ష్మణమునీన్ స్వగురూన్ ప్రణమ్య శ్రీశైలశంఖపుర రాఘవసూరిసూనుః । అభ్యర్థితో వరదరాజసుధీర్వినమ్రైః శ్రీస్తోత్రరత్నవివృతింసులభాంవిధత్తే॥ శ్రీకృష్ణపాదవ్యాఖ్యానసారాన్ సంగృహ్యానిర్మితే । స్ఖలితానిప్రబన్ధేస్మిన్ క్షమధ్వంకృపయాబుధాః॥ .............................. *

### அ வ தா ரி கை.

ஸர்வேஶ்வரன், ஆழ்வாருக்குத் தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை மயர்வறமதிநலமருளினனென்கிறபடியே நிர்ஹேதுகக்ருபையாலே தன்னைக் காட்டிக் கொடுக்க, கொடுத்த ஜ்ஞானம் பக்தி ரூபாபன்ன ஜ்ஞானமாகையாலே, பரபக்தியுக்தராய்க்கொண்டு, பகவத்குணாநுபவத்தைப்பண்ணி, அதனுடைய விபாகதசையான பரஜ்ஞானம்பிறந்து, அஃ[illegible]ப்பக்திபிறந்து, அதனாலே "பரம்ஜ்யோதிருபஸம்[illegible]" என்றும், "பரமம்ஸாம்யமுபைதி" என்றும் தம்மையேயமயாக்கவருள்செய்வர்" என்றும், சொல்லுகிற படியே ஸ்வஸ்வ ரூபத்தைப் பெற்று, பார்யைக்கு அங்கபூஷணம் போலே "வழுவிலாவடிமைசெய்யவேண்டும்" என்றும், "அவாவற்று வீடுபெற்ற" என்றும் சொல்லுகிறபடியே ப்ராப்திபலமான கைங்கர்யத்தைப்பெற்ற ஆழ்வாருடையத்ரவிடோபநிஷத் ரஹஸ்யத்தைப் பெரியமுதலியார், ஆழ்வாருடைய ப்ரஸாதத்தாலே லபித்து, பின்பு ஆசார்யோபதேச க்ரமத்தாலே, ஆளவந்தார் அந்தத்ரவிடோபநிஷத் ரஹஸ்யார்த் தங்களைலபித்து, அதனைத் தாமனு ஸந்தித்து, அவ்வனு ஸந்தானத்தால் பிறந்த ப்ரீதி உள்ளடங்காமையாலே பரீவாஹாபேக்ஷை பிறக்கையாலும், ஸம்ஸாரிகள் துர்க்கதியைக்கண்டு யிவர்கள் இத்தை யிழக்கவொண்ணா தென்னும் க்ருபையாலும், ஸகலோப நிஷத் ரஹஸ்யமாய், துர்ஜ்ஞேயமான வர்த்தத்தை ஸர்வருமறியும்படியாக, இவர் ஸ்தோத்த்ரமாக வெளியிடுகின்றார்.... *



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

அஸ்மத்குருபரம்பராயைநம:.

ஸ்ரீயாளவந்தார் திருவடிகளேசரணம்.

## ஸ்தோத்ரரத்நஸாரப்ரகாஶிகை.

### த னி ய ன் க ள்.

శ్లో॥ స్వాదయన్నిహసర్వేషాం త్రయ్యన్తార్థం సుదుర్గ్రహమ్।
స్తోత్రయామాసయోగీన్ద్రః తం వన్దే యామునాహ్వయమ్॥

ஸ்வாதயன்னிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ர[illegible]
ஸ்தோத்ரயாமாஸயோகீந்த்ர ஸ்தம்வந்தேயாமுநாஹ்வயம்.

தாத்பர்யம்.— எந்த மஹாநுபாவர் மிகவும் அறிவதற்கு அருமையான வேதாந்தஸாரங்களைச் சங்கரஹித்து இந்த லீலாவிபூதியில் எல்லோரும் எளிதில் உணர்ந்துய்யும்படி ஸ்தோத்ரரூபமாய்ச் செய்தருளினரோ அப்படிப்பட்ட பரமோபகாரரும், யாமுநாசாரியர் என்னும் திருநாமம் பெற்றவருமான ஸ்ரீயாளவந்தாருக்குத் தண்டம்சமர்ப்பிக்கின்றேன்.... *

శ్లో॥ నమోనమోయామునాయయామునాయనమోనమః।
నమోనమోయామునాయయామునాయనమోనమః॥

நமோநமோயாமுநயயாமுநயநமோநம:,
நமோநமோயாமுநயயாமுநயநமோநம:.

தாத்பர்யம்.— யாமுநாசாரியரென்னும் ஸ்ரீ ஆளவந்தாருக்கு மேலுமேலும் தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன். ... ... ... *




## அவதாரிகை.

ஆழ்வாருக்குப்பகவத் ப்ரஸாத மடியாகப்பிரந்த ஜ்ஞானத்தை ஆழ்வார் ப்ரஸாதத்தாலே பெற்று, தம்மளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே, பின்புள்ளாருக்கும் உபகாரமாம்படி, இத்தர்ஶந ஸ்தாபக ரானபடியாலும், மணக்கால்நம்பி, பெரியமுதலியாருடைய தநம் இது, உம்முடைய பேற்றுக் கெல்லாம் அவருடைய திருவடிகளிலே ஸம்பந்தமே என்கையாலும் ஸ்ரீயாளவந்தார் முதலிட்டு மூன்று ஶ்லோகத்தாலே பெரியமுதலியாரை ஆஶ்ரயிக்கிருர்.

முதல்ஶ்லோகத்தில், ஒருவனைக் கவிபாடப்புக்கால், அவன் ஐஶ்வர்யத்தைச்சொல்லிக் கவிபாடுமாப்போலே, வைஷ்ணவனுக்கு ஐஶ்வர்யமான ஜ்ஞாந பக்தி வைராக்யங்களுடைய ப்ரகர்ஷத்தைச் சொல்லி ஸ்ரீமந்நாதமுனிகளை நமஸ்கரிக்கிருர்.

శ్లో॥ నమోఽచిన్త్యాద్భుతాక్లిష్టజ్ఞానవైరాగ్యరాశయే।
నాథాయ మునయేఽగాధభగవద్భక్తిసిన్ధవే॥ ... ౧

நமோசிந்த்யாத்புதாக்லிஷ்டஜ்ஞானவைராக்யராசயே,
நாதாயமுநயேகாத பகவத்பக்திஸிந்தவே.

| பதம் | | ப்ரதிபதம். |
|---|---|---|
| (అచిన్త్యాద్భుతాక్లిష్ట జ్ఞానవైరాగ్యరాశయే) (அசிந்தயாத்புதாக்லிஷ்ட ஜ்ஞானவைராக்யராஶயே) | | |
| అచిన్త్య | அசிந்தய | ஜ்ஞாநிகராலும்மனத்தினல் அளவிடக்கூடாதவைகளாயும் |
| అద్భుత | அத்புத | அறிந்தமட்டில் அநுஸந்தித்தாருக்குஆச்சரியங்களாயும் |
| అక్లిష్ట | அக்லிஷ்ட | கேவலம் பகவத்ப்ரஸாத லப்தங்களாகையாலேவருத்தமற்றிருப்பவையாயுமுள்ள |
| జ్ఞాన | ஜ்ஞாந | ஆத்மா ஈஶ்வரனுக்கு அநந்யார்ஹ சேஷம் என்றும், அசித்ஸ்வரூபம் த்யாஜ்யமென்றும், ஈஶ்வரன் இவ்விரண்டுக்கும் நியந்தாவென்றும் அறிகையாகியதத்வத்ரயவிஷயமான ஜ்ஞாநமும் |
| వైరాగ్య | வைராக்ய | இவ்விலக்ஷண ஜ்ஞானத்தால் எம்பெருமானை யொழிந்த இதரவிஷய வைராக்யமும் ஆகிய இவற்றினுடைய |
| రాశయే | ராஶயே | ராசியாயிருப்பவரும் |
| మునయే | முநயே | த்யேயவஸ்துவை ஸாக்ஷாத்கரித்து அவனென்றேகிடக்கும்நெஞ்சுடையவரும் |
| (అగాధభగవద్భక్తిసిన్ధవే) (அகாதபகவத்பக்திஸிந்தவே) | | |
| అగాధ | அகாத | நிலைக்கவொண்ணுத (அன்றிக்கே) ஸர்வேஶ்வரனுந்தானதில்புக்கமிழும்படியான |
| భగవత్ | பகவத் | * ஷாட்குண்ய பரிபூர்ணனான பரவாஸுதேவவிஷயமான |
| భక్తి | பக்தி | பக்திக்கு |
| సిన్ధవే | ஸிந்தவே | கடல்போன்றவரும் |
| నాథాయ | நாதாய | ஸ்ரீரங்கநாத னென்று திருநாமம் பெற்றவருமாகிய ஸ்ரீமந்நாதமுனிகள் பொருட்டு |
| నమః | நமஃ | நமஸ்காரத்தை |
| కుర్వే | குர்வே | செய்கின்றேன். |

தாத்பர்யம்.— ஜ்ஞாநிகராலும் இவ்வளவென்று [illegible] இடக் கூடாத வையாயும், அறிந்தமட்டில் அற்புதங்களாயும் வ்யாஸாதிகளைப்போலே ஸ்வயத்ந ஸாத்ய தபஸ்ஸால் வந்தவைகளன்றிக்கே க்லேஶமன்றிப் பகவத் கடாக்ஷத்தினலே வந்தவையாயும் இருக்கிற, ஆத்மா ஈஶ்வரனுக்கு அநந்யார்ஹ சேஷமென்றும் அசித் ஸ்வரூபம் த்யாஜ்யமென்றும் ஈஶ்வரன் இவ்விரண்டுக்கும் நியந்தாவென்றும் அறிகையா

---

* ஷாட்குண்யமாவது-ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ்ஸு.— இவற்றுள் ஜ்ஞாநமாவது - என்றுமொக்க ஸர்வவிஷயப்பிரகாசகமாய் ஸ்வப்ரகாசமுமான குணவிசேஷம்.—சக்தியாவது-ஜகத் ப்ரகிருதி பாவ மாதல், அகடிதகடநா ஸாமர்த்தியமாதல்.— பலமாவது-ஜகத்காரணத்வப்ரயுக்தஶ்ரம மன்றிக்கே யொழிகையாதல், ஸமஸ்தவஸ்துதாரண ஸாமர்த்தியமாதல்.— ஐஶ்வர்யமாவது- கர்த்துருத்வலக்ஷணமான ஸ்வாதந்திரியமாதல், ஸமஸ்தவஸ்து நியமன ஸாமர்த்தியமாதல்.— வீர்யமாவது-ஜகதுபாதாநமாகா னிர்க்கச்செய்தேயும் ஸ்வரூபவிகாரமன்றியிலேயொழியும்படியான அவிகாரதை.— தேஜஸ்ஸாவது-ஸஹகாரிநைரபேக்ஷ்யமாதல், பராபிபவந ஸாமர்த்தியமாதல்.—

கிய தத்வத்ரய விஷயமான ஜ்ஞானமும், இவ்விலக்ஷண ஜ்ஞாநத்தால் எம்பெருமானை யொழிந்த இதர விஷயவைராக்யமும் ஆகிய இவற்றிற்கு இருப்பிடமாயும், த்யேயவஸ் துவை ஸதாஸாக்ஷாத்கரித்து அவனென்றே கிடக்கும் நெஞ்சுடையவரும், ஸர்வேஶ்வரனும் தானதில் புக்கமிழும்படி அகாதமாகிய, ஷாட்குண்ய பரிபூர்ண பரவாஸுதேவ விஷய பக்திக்குக்கடல் போலே யிருப்பவரும் தம்முடைய பிதாவான ஈஶ்வர முனிகளால் ஸ்ரீரங்கநாதரென்று திருநாமம் சாத்தப் பெற்றவருமாகிய ஸ்ரீமந்நாதமுனிகளுக்குத்தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன்.

அவதாரிகை.— இந்தஶ்லோகத்தில் ஸ்ரீ மந்நாத முனிகளுடைய பகவதவதார விஷய ஜ்ஞாந ப்ரகர்ஷத்தை அருளிச்செய்து இன்னமவர்க்கடியே னென்கிறார்.

శ్లో॥ తస్మై నమో మధుజిదఙ్ఘ్రిసరోజతత్త్వ
జ్ఞానానురాగమహిమాతిశయాన్తసీమ్నే।
నాథాయ నాథమునయేఽత్ర పరత్ర చాపి
నిత్యం యదీయచరణౌ శరణం మదీయమ్॥

தஸ்மைநமோமதுஜிதங்க்ரிஸரோஜதத்வ
ஜ்ஞாநாநுராகமஹிமாதிஶயாந்தஸீம்நே,
நாதாயநாதமுனயேத்ரபரத்ரசாபி
நித்யம்யதீயசரணௌஶரணம்மதீயம்.

| பதம். | | ப்ரதிபதம். |
|---|---|---|
| అత్ర | அத்ர | இந்தலீலாவிபூதியிலும் |
| పరత్రచాపి | பரத்ரசாபி | ப்ராப்யமானநித்யவிபூதியிலும் |
| నిత్యం | நித்யம் | இவ்வாத்மதத்வமுள்ளகாலமத்தனையும் |
| ( యదీయచరణౌ ) | | |
| ( யதீயசரணௌ ) | | |
| యదీయ | யதீய | எந்நாதமுனிகளுடையனவாயுள்ள |
| చరణౌ | சரணௌ | திருவடிகள் |
| మదీయం | மதீயம் | அடியேனுடையவையான |
| శరణం | ஶரணம் | உபாயோ பேயங்களோ (அத்தன்மையானதிருவடிகளையுடையவரும்) |
| మధుజిదఙ్ఘ్రిసరోజతత్త్వజ్ఞానానురాగమహిమాతిశయాన్తసీమ్నే | | |
| மதுஜிதங்க்ரி ஸரோஜதத்வஜ்ஞாநாநுராகமஹிமாதிஶயாந்தஸீம்நே | | |



| | | |
|---|---|---|
| మధుజిత్ | மதுஜித் | விரோதிநிவர்த்தகனானஎம்பெருமானுடைய |
| అఙ్ఘ్రిసరోజ | அங்க்ரிஸரோஜ | விகாஸம்செவ்விகுளிர்ச்சிபரிமளமுதலியவற்றிற்குத்தாமரையையொருபடிபோலியாகச்சொல்லலாம்படியானதிருவடிகளில் |
| తత్త్వజ్ఞాన | தத்வஜ்ஞாந | அவதாரவிஷய ஜ்ஞானமும் ஆஶ்ரிதபாரதந்த்ரிய விஷயஜ்ஞானமும் |
| అనురాగ | அநுராக | அநுபவித்தாலல்லது நிற்க வொண்ணாத ப்ரேமமும் ஆகியஇவற்றினுடைய |
| మహిమ | மஹிம | மஹத்வத்தின் |
| అతిశయ | அதிசய | உத்கர்ஷத்தினுடைய |
| అన్తసీమ్నే | அந்தஸீம்நே | முடிவே எல்லையாயிருப்பவரும் |
| నాథాయ | நாதாய | நமக்கு ஸ்வாமியும் இத்தர்ஶனத்திற்கு நாதனென்று மஹாத்மாக்களாலேகொண்டாடப்பட்டவருமான |
| తస్మై | தஸ்மை | அப்படிப்பட்ட |
| నాథమునయే | நாதமுநயே | ஸ்ரீமந்நாதமுனிகள்பொருட்டு |
| నమః | நமஃ | தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன். |

தாத்பர்யம்.— ஆஶ்ரித விரோதி நிவர்த்தகனான எம்பெருமானுடைய தாமரைமலர்போலழகியதும், போக்யமுமான திருவடியே மோக்ஷத்திற்கு உபாயமும், அதுவே மோக்ஷதசையில் அநுபவிக்கத் தக்க உபேயமு மென்றும், ( அன்றிக்கே ) அவதாரவிஷயமாயும், ஆஶ்ரித பாரதந்த்ரிய விஷய மாயுமுள்ள தத்வஜ்ஞானம் அவனை யனுபவித்தாலல்லது நிற்கவொண்ணாத ப்ரேமம் ஆகிய இவற்றினுடைய மஹிமாதிஶயத்திற்கு எல்லையாயிருப்பவரும், நமக்குஸ்வாமியாயும், இத்தர்ஶநத்திற்கு நாதனென்று மஹாத்மாக்களாலே கொண்டாடப் பட்டவரும், யோகத்தினாலே ஸர்வஸாக்ஷாத்காரமுள்ள வருமாக எவர் இருக்கின்றாரோ, எவருடைய திருவடிகளே இஹத்திலும் பரத்திலும் நமது ஆத்மதத்வமுள்ள காலமத்தனையும்நமக்குச்சரணமாகின்றனவோ அப்படிப்பட்ட ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு அடியேன் தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன்.

அவதாரிகை.— ஆஶ்ரிதரை ஒருக்காலும் நழுவவிடாத அச்யுதவிஷயஜ்ஞாநபக்திகள் தம்மளவில் பர்யவஸியாதே, பகவத்விஷயத்திற்கு அபூமியான லீலாவிபூதியெங்கும் வெள்ளமிடும் படியான, ஸ்ரீமந்நாத முனிகளுடைய ஜ்ஞாநபக்தி ப்ரக்ருஷ்டதையைச் சொல்லி, பின்னையுமவர்க்கு அடியேனென்கிறார்.

శ్లో॥ భూయోనమోఽపరిమితాచ్యుతభక్తితత్త్వ
జ్ఞానామృతాబ్ధిపరివాహశుభైర్వచోభిః।
లోకేఽవతీర్ణపరమార్థసమగ్రభక్తి
యోగాయనాథమునయేయమినాంవరాయ॥

பூயோநமோபரிமிதாச்யுத பக்திதத்வ
ஜ்ஞாநாம்ருதாப்திபரிவாஹஶுபைர்வசோபி:,
லோகேவதீர்ணபரமார்த்தஸமக்ரபக்தி
யோகாயநாதமுநயேயமிநாம்வராய.

பதம். ப்ரதிபதம்.

(అపరిమితాచ్యుతభక్తితత్త్వ
జ్ఞానామృతాబ్ధిపరివాహశుభైః)
(அபரிமிதாச்யுத பக்திதத்வ
ஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹஶுபை:)

| | | |
|---|---|---|
| అపరిమిత | அபரிமித | ஸம்ஸாரமெங்கும் வெள்ளமிடும்படி யெல்லையற்றுள்ள |
| అచ్యుత | அச்யுத | ஆஶ்ரிதரையொருக்காலும் நழுவவிடாத ஸ்வாமியின் விஷயமான |
| భక్తి | பக்தி | பக்தியும் |
| తత్త్వజ్ఞాన | தத்வஜ்ஞாந | தத்வஜ்ஞாநமுமாகிய |
| అమృతాబ్ధి | அம்ருதாப்தி | பாற்கடலினுடைய |
| పరివాహ | பரிவாஹ | வெளிப் பட்டாலன்றி நிற்கமாட்டாமலி ருக்கிற ப்ரவாஹரூபமாய் |
| శుభైః | ஶுபை: | சுருங்கச்சொல்லல் முதலிய வற்ருல் மங் களமாயிருக்கிற |
| వచోభిః | வசோபி: | ஸ்ரீஸூக்திகளால் |
| లోకే | லோகே | பகவத்பக்திக்கு மேட்டுமடையான ஸம் ஸாரத்திலே |

(అవతీర్ణపరమార్థసమగ్రభక్తియోగాయ)
அவதீர்ணபரமார்த்தஸமக்ரபக்தியோகாய

| | | |
|---|---|---|
| అవతీర్ణ | அவதீர்ண | ஈஶ்வராவதாரம் போலே ஸ்வயம் ப்ர யோஜனமாக அவதரித்ததாய் |
| పరమార్థ | பரமார்த்த | பரமப்ரயோஜனரூபமாய் |
| సమగ్ర | ஸமக்ர | ஸம்பூர்ணமுமாயிருக்கிற |



| | | |
|---|---|---|
| భక్తియోగాయ | பக்தியோகாய-பக்தியோகத்தை யுடையவரும் | |
| యమినాం | யமிநாம் | ஸர்வேஶ்வரனையல்ல தறியாத கரணங் களை யுடையவர்களுக்குள் |
| వరాయ | வராய | ஶ்ரேஷ்டருமான (அன்றிக்கே) ஆதரி த்து வரிக்கத்தக்கவருமான |
| నాథమునయే | நாதமுநயே | ஸ்ரீமந்நாதமுனிகள் பொருட்டு |
| భూయః | பூய: | பலமுறை |
| నమః | நம: | ப்ரணாமம் செய்கிறேன். |

தாத்பர்யம்.— ஆஶ்ரிதரக்ஷணத்தில் நின்றும் ஒருக்காலும் நழுவாதவனும் அன்றிக்கே கல்யாண குணங்களாலே குறைவற்றிருப்பவனுமான அச்சுதன் விஷயத்தில் உண்டாகிய மஹத்தானபக்தி தத்வஜ்ஞானங்களாகிய பாற்கடலானது உள்ளடங்காமல் மேலே பெருகியதுபோலே மதுரமான வாக்குகளாலே பரம ப்ரயோஜன ரூபமாயும், பரிபூர்ணமாயும் இருக்கிற பக்தியோகத்தை இவ்வுலகத்தில் பிரகாஶிப்பித்தவரும் ஸர்வேஶ்வரனையல்ல தறியாத கரணங்களை யுடையவர்களுக்குத் தலைவரும் (அன்றிக்கே) அவர்கள் ஆதரிக்கத்தக்க வருமான ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு மேலு மேலும் தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன். ... ... (௩)

அவதாரிகை.— § பெரிய முதலியார் ஜ்ஞாநத்திற்கு லோகபரிக்ரஹமாத்ரமன்றிக்கே வேதவிதக்ரேஸரான பராஶராநுமதியாலே ப்ராமாணிகத்வ முண்டென்று சொல்லி, க்ருஷ்ண ப்ராவண்யத் தாலும், லோகத்திற்குத் தத்வஜ்ஞாந மஹாநிதியை உபகரித்தமையாலும், பெரியமுதலியாரோடு ஸ்வபாவைக்ய முடைய ஸ்ரீபராஶர பகவானைநமஸ்கரிக்கிறார்.

శ్లో॥ తత్త్వేనయశ్చిదచిదీశ్వరతత్స్వభావ
భోగాపవర్గతదుపాయగతీరుదారః।
సందర్శయన్నిరమిమీతపురాణరత్నం
తస్మైనమోమునివరాయపరాశరాయ॥ ౪

தத்வேநயஶ்சிதசிதீஶ்வரதத்ஸ்வபாவ
போகாபவர்கததுபாய கதீருதார:,
ஸந்தர்ஶயந்நிரமிமீத புராணரத்நம்
தஸ்மைநமோமுனிவராயபராஶராய.

§ பெரியமுதலியார் ஸ்ரீமந்நாதமுனிகள்.

| பதம். | | ப்ரதிபதம். |
|---|---|---|
| ఉదారః | உதாரः | ப்ரதிப்ரயோஜநமன்றிக்கே தத்வஜ்ஞாந மஹாநிதியை யுபகரிப்பவரான |
| యః | யः | எந்தரிஷிஶ்ரேஷ்டர் |
| (చిదచిదీశ్వరతత్స్వభావ భోగాపవర్గ తదుపాయగతీః) (சித சிதீஶ்வர தத்ஸ்வபாவ போகாபவற்க ததுபாயகதீः) | | |
| చిత్ | சித் | பத்த முக்த நித்ய ரூபேண மூன்றுபடிப்பட்டிருக்கிற சேதநதத்வ ஸ்வரூபமும் |
| అచిత్ | அசித் | சுத்த ஸத்வ மிஶ்ர ஸத்வ ஸத்வ சூன்ய ரூபேண மூன்றுபடிப் பட்டிருக்கிறஅசேதநதத்வ ஸ்வரூபமும் |
| ఈశ్వర | ஈஶ்வர | இவ்விரண்டுக்கும் நியந்தாவான ஈஶ்வர தத்வ ஸ்வரூபமும் |
| తత్స్వభావ | தத்ஸ்வபாவ | அந்தத் தத்வத்திரயங்க ளுடைய ஸ்வபாவங்களும் |
| భోగ | போக | * இஹலோக பரலோகபோகங்களும் |
| అపవర్గ | அபவற்க | § ஆத்ம ப்ராப்தி பகவத் ப்ராப்தி ரூப மோக்ஷங்களும் |
| తదుపాయ | ததுபாய | அவற்றை அடைகிறதற்குரிய கர்மஜ்ஞாநபக்திப்ரபத்திகளாகியஉபாயங்களும் |
| గతీః | கதீः | தூமார்ச்சிராதி மார்க்க விசேஷங்களும் என்னும் இவற்றை |
| తత్త్వేన | தத்வேந | யதார்த்தமாக |
| సందర్శయన్ | ஸம்தர்ஶயன் | ஸம்சயவிபர்யயங்களறத் தாமுணர்ந்தவராய் உணர்ந்தவைகளை உள்ளபடி அறிவிப்பவராய் |
| పురాణరత్నం | புராணரத்நம் | ஸ்வரஸத்தை என்றுமொக்க ஒருவரால் அழிக்க வொண்ணாததாய் ரத்நம்போலே பொருளை விளக்குவதாய் ஸங்கரஹமாய் ஆபத் ரக்ஷகமுமாயுள்ள ஸ்ரீ விஷ்ணுபுராணத்தை |
| నిరమీమత | நிரமிமீத | செய்தருளினரோ |

* இஹலோக பரலோக போகங்களும் ஆத்மாநுபவமும்.
§ பரிபூர்ண பரப்ரஹ்மாநுபவரூப மோக்ஷமும்.



| | | |
|---|---|---|
| తస్మై | தஸ்மை | அப்படிப்பட்டவரும் |
| మునివరాయ | முநிவராய | ரிஷிஶ்ரேஷ்டரும் |
| పరాశరాయ | பராஶராய | பாராகிய பாஹ்யமதஸ்தர்களை ப்ரமாண பாணங்களாலே ஹிம்ஸித்துப் பரம வேதமார்க்கத்தை ஸ்தாபித்ததினாலே பராஶரரென்னுந் திருநாமம் பெற்றவருமான மஹரிஷியின் பொருட்டு |
| నమః | நமः | ப்ரணாமத்தை |
| కుర్వే | குர்வே | செய்கின்றேன். |

தாத்பர்யம்.— * பத்த முக்த நித்ய ரூபத்தினாலே மூன்றுபடிப் பட்டிருக்கிற சேதநதத்வஸ்வரூபமும், § சுத்த ஸத்வ மிஶ்ரஸத்வ ஸத்வ சூந்ய ரூபத்தினாலே மூன்றுபடிப்பட்டிருக்கிற அசேதன தத்வ ஸ்வரூபமும், இவ்விரண்டுக்கும் நியந்தாவான ஈஶ்வரதத்வ ஸ்வரூபமும், அந்தத் தத்வத்திரயங்களுடைய ஸ்வபாவங்களும், பிரஹ்மாதி பிபீலிகாந்தமான பத்தசேதந வர்க்கத்திற்குக் கர்ம்மாநுகுணமாக அநுபவிக்கத் தக்க சப்தாதி போகங்களும், ஆத்மப்ராப்தி பகவத்ப்ராப்தி ரூபமோக்ஷங்களும், அவற்றை அடைகிறதற்குரிய கர்மஜ்ஞானபக்தி ப்ரபத்திகளாகிய உபாயங்களும, தூமார்ச் சிராதிமார்க்க விசேஷங்களும் என்னும் இவை எல்லாவற்றையும் உள்ளபடி தெரிவிக்கத்திருவுள்ளம்பற்றி (புராபி, நவம், புராணம்) என்று பழமையாயிருந்த போதிலும், அநுபவிப்பாருக்கு ரஸவிசேஷங்களாலே அப்போதுக்கப்போது நூதநமாகத்தோன்றுவதாய், ரத்நம்போலே பொருளைவிளக்குவதாய் ஸங்க்ரஹமாய் ஆபத் ரக்ஷகமுமா யிருப்பதினாலே புராணரத்ந மென்று ப்ரஸித்தமாயுள்ள ஸ்ரீவிஷ்ணுபுராணத்தை அருளிச்செய்தவரும், ஸம்ஸாரிகள்பக்கல் ப்ரார்த்தனை யாதல், பிரயோஜனத்தை யாதல், நினையாமலே இவர்கள் அநர்த்த பரிஹாரத்தையே பிரயோஜனமாக நினைத்து உபகரித்தல்லது நிற்கமாட்டாத மேகம்போலே தத்வஜ்ஞான மஹாநிதியை உபகரித்தவரும், பராகிய பாஹ்யமதஸ்தர்களை ப்ரமாணபாணங்களாலே ஹிம்

* பத்தர் - கர்மவஶ்யரான ப்ரஹ்மாதி பிபீலிகாந்த சேதநர்.— முக்தர் - கர்மபந்தமற்றுப் பரமபதத்தைப் பெற்று ப்ரஹ்மாநுபவம் பண்ணுமவர்.— நித்யர் - அநந்தகருடாதி நித்யஸூரிகள்.

§ ஶுத்தஸத்வமாவது - நித்யவிபூதி.— மிஶ்ரஸத்வமாவது-ப்ரகிருதி.— ஸத்வஶூந்யமாவது- காலம்.

ஸித்துப் பரமவேத மார்க்கத்தை ஸ்தாபித்ததினுலே (பராஸரர்) என்னுந் திருநாமம் பெற்றவருமான மஹரிஷியின் பொருட்டுத் தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன். ... ... ... ... ... (௪)

அவதாரிகை.— இந்தஜ்ஞாநம் ஸர்வாதிகாரமாம்படி த்ராவிடமான ப்ரஹ்ம ஸம்ஹிதையை அருளிச்செய்கையாலும், ஸ்ரீமந்நாத முனிகளுக்கு ஆழ்வார்திருவடிகள்ஜ்ஞாநோத்பாதக மாகையாலும், இந்தமஹோபகாரங்களைநினைத்து ஆழ்வார் திருவடிகளிலே சரணம் புகுகிறார்.... *

ஶ్లో॥ మాతా పితా యువతయ స్తనయా విభూతి
స్సర్వం యదేవ నియమేన మదన్వయానామ్।
ఆద్యస్య నః కులపతే ర్వకుళాభిరామం
శ్రీమ త్తదఙ్ఘ్రియుగళం ప్రణమామి మూర్ధ్నా॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதி
ஸ்ஸர்வம்யதேவநியமேநமதன்வயாநும்,
ஆத்யஸ்யநஃகுலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நு

| பதம். | | ப்ரதிபதம், |
|---|---|---|
| మదన్వయానాం | மதந்வயாநாம் | வித்யையாலும், ஜன்மத்தாலும் என் வம்ஸ ஸம்பந்திகளுக்கு |
| యదేవ | யதேவ | எந்த ஸ்ரீபாதயுகளமே |
| నియమేన | நியமேந | எக்காலத்திலும் (ம் |
| మాతా | மாதா | ப்ரியத்தையேவேண்டியிருக்கும்மாதாவு |
| పితా | பிதா | நலத்தை வேண்டுவோனுகிய தந்தையும் |
| యువతయః | யுவதயஃ | மனத்திற்கு இனியரான ஸ்திரீகளும் (ம் |
| తనయాః | தநயாஃ | பக்குவதசையில்பாதுகாக்கும்புத்ரர்களு |
| విభూతిః | விபூதிஃ | இவ்வெல்லா வற்றையும் நன்ருக்கும் செல்வமும் |
| సర్వం | ஸர்வம் | மற்றெல்லாநலமும் ஆகின்றனவோ |
| ఆద్యస్య | ஆத்யஸ்ய | ப்ரதமாசார்யரும் |
| నః కులపతేః | நஃ குலபதேஃ | ஸ்திரீகளுக்குப் பர்த்ரு குலமே குலமாகிருப்போல ஸ்ரீமந்நாதமுனிஸம்ப்ரதாயஸ்தர்களான நம்முடையகுலத்திற்குக் கோத்ரமுனிவருமான நம்மாழ்வாருடையனவாயும் |
| వకుళాభిరామం | வகுளாபிராமம்- | திருமகிழ் மாலையாலே அழகுள்ளனவாயும் |
| శ్రీమత్ | ஸ்ரீமத் | ஸ்ரீவைஷ்ணவ தேஜஸ்ஸோடு நித்யமும் கூடினவையாயும் |
| తత్ | தத் | பேசிமுடிக்க வொண்ணுத மஹிமையுள்ளனவாயும் விளங்கு கின்றனவோ அப்படிப்பட்ட |
| అఙ్ఘ్రియుగళం | அங்கிரியுகளம்- | திருவடியிணையை |
| మూర్ధ్నా | மூர்த்நு | ஸிரஸினுலே |
| ప్రణమామి | ப்ரணமாமி | தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன். |



தாத்பர்யம்.— ஸ்திரீகளுக்குப்பர்த்ருகுலமே குலமாகிருப்போல ஸ்ரீ மந்நாத முனி ஸம்ப்ரதாயஸ்தர்களான நம்முடைய குலத் திற்குக் கோத்ர ரிஷியும், பூர்வாசார்யர்களுக்கு முந்தினவருமான நம்மாழ்வாருடையனவாயும், ஸ்ரீ வைஷ்ணவ தேஜஸோடு நித்யமுங் கூடினவையாயும் திருமகிழ்மாலையாலே அழகுள்ளனவாயும், இஹத்திலும், பரத்திலும் நமக்கும், நம்முடைய குலத்தாருக்கும், ப்ரியத்தையே வேண்டியிருக்கும் மாதாவும், நலத்தைவேண்டுவோனுகியதந்தையும், மனத்துக்கு இனியரான ஸ்திரீகளும், பக்குவதசையில்பாதுகாக்கும்புத்திரர்களும், இவ்வெல்லா வற்றையும் நன்ருக்கும் செல்வமும், மற்றெல்லாநலங்களுமாவனவாயுள்ள திருவடிகளிரண்டையும், ஸிரஸ்ஸினுலே தண்டம் ஸமர்ப்பிக்கின்றேன்.... ... ... ... ... (௫)

அவதாரிகை.— இப்படி உபகாரகர்களான ஆழ்வாராதிகளை ஸ்துதித்து ப்ரதமோபகாரகனுயும் ஸ்துதிப்ரியனுயுமுள்ள ஸ்ரீயப்பதியைஸ் துதிப்பது ஆசார்யர் களுக்கு ப்ரியமாகையால் ஸ்தோத்ரத்தில் மேற் சொல்லப்புகுகிற உபாயோபேயங்களை ஸங்கிரஹித்துக்கொண்டு பகவத்ஸ்தோத்திரத்திலே இழிகிறார். ... ... ... ... *

శ్లో॥ యన్మూర్ధ్ని మే శ్రుతిశిరస్సు చ భాతి యస్మి
న్నస్మన్మనోరథపథస్సకలస్సమేతి।
స్తోష్యామి నః కులధనం కులదైవతం త
త్పాదారవిన్దమరవిన్దవిలోచనస్య॥

யன்மூர்த்நிமேச்ருதிசிரஸ்ஸுசபாதியஸ்மின்
அஸ்மன்மநோரதபதஸ்ஸகலஸ்ஸமேதி,

ஸ்தோஷ்யாமிநஃகுலதநம்குலதைவதந்தத்
பாதாரவிந்தமரவிந்தவிலோசநஸ்ய

| | பதம். | ப்ரதிபதம், |
|---|---|---|
| యత్ | யத் | எந்தத் திருவடியிணை |
| మే | மே | நீசனான என்னுடைய |
| మూర్ధ్ని | மூர்த்நி | சிரஸிலும் |
| శ్రుతిశిరస్సు చ | ஶ்ருதிஶிரஸ் (ஸு-ச | நித்யங்களும் நிர்த்தோஷங்களு மாகிய வேதாந்தங்களிலும் |
| భాతి | பாதி | ஸௌலப்யத்தினாலேவேற்றுமை யில்லாமல் விளங்கு கின்றவோ |
| యస్మిన్ | யஸ்மின் | எந்தத் திருவடியில் |
| సకలః | ஸகலஃ | ஸமஸ்தமாயுள்ள |

( అస్మన్మనోరథపథః )

( அஸ்மந்மனோரதபதஃ )

| | | |
|---|---|---|
| అస్మత్ | அஸ்மத் | நம்முடைய |
| మనోరథపథః | மனோரதபதஃ | ஆசையின்வழியானது |
| సమేతి | ஸமேதி | அழகிதாகச் சேருகின்றதோ |
| నఃకులధనం | நஃ குலதநம் | நம் குலத்திற்கு அயத்நஸித்த தநமாயும் |
| కులదైవతం | குலதைவதம் | நம் குலத்தாருக்கு ஆஶ்ரயிக்கத் தக்க தைவமுமாய் |
| అరవిన్దవిలోచ (నస్య | அரவிந்தவிலோ) (சநஸ்ய | ஸு-ஶரிபோக்யமான திருக்கண்களி னழகையுடைய ஸர்வேஶ்வர னுடையதுமாய் |
| తత్ | தத் | அப்படிப்பட்ட பெருமை யுடையதான |
| పాదారవిన్దం | பாதாரவிந்தம் | திருவடித்தாமரையை |
| స్తోష్యామి | ஸ்தோஷ்யாமி | ஸ்தோத்திரம் பண்ணுகின்றேன். |

தாத்பர்யம்.— எந்தத்திருவடித்தாமரை நித்யங்களும் நிர்த்தோஷங்களுமான வேதாந்தங்களில் விளங்குவது போல நீசனான அடியேனுடைய ஶிரஸிலும் ஸௌலப்ய குணத்தினாலே அந்த காரத்தில் தீபம் போல விளங்கா நிற்கின்றதோ, இம்மை மறுமைக் குரிய நம்முடைய மனோரதங்களெல்லாம் எதில் அழகியதாய்ச் சேருகின்றதோ அப்படிப்பட்டதாயும், அயத்நஸித்தமாய் ஆபத்தில் ரக்ஷகமாய் நித்ய போக்யமுமாகிய குலதனமாயும், இத்தனத்தைத் தருமதாய் நம்குலத்தாருக்குவகுத்ததைவமாயும் விளங்குகின்ற, ருசிஜனகமாய், ஸு-ஶரி போக்ய மான



திருக்கண்களி னழகை யுடைய ஸர்வேஶ்வரனது பாதார விந்தத்தை ஸ்தோத்திரம் பண்ணுகின்றேன். ... ... ... ... (௩)

அவதாரிகை.— விதி சிவ ஸநகாதிகள் கரையிலே நின்று அழுந்து கிறவிஷயத்தைப் பரிச்சேதித்துப் புகழ இழிந்தேனெனத் தம்மைக்ஷேபித்து, யுத்தத்திலே உத்யுக்தனான அர்ஜு-னன் நிவ்ருத்தனானாப் போலே ஸ்தோத்ரத்தில் நின்றும் நிவ்ருத்தராகிறார். ... ... ❋

శ్లో॥ తత్త్వేనయస్యమహిమార్ణవశీకరాణుః
శక్యోనమాతుమపిశర్వపితామహాద్యైః।
కర్తుంతదీయమహిమస్తుతిముద్యతాయ
మహ్యంనమోఽస్తుకవయేనిరపత్రపాయ॥

தத்வேநயஸ்யமஹிமார்ணவஶீகராணுஃ
சக்யோநமாதுமபிஶர்வபிதாமஹாத்யைஃ,
கர்தும்ததீயமஹிமஸ்துதிமுத்யதாய
மஹ்யம்நமோஸ்துகவயேநிரபத்ரபாய

| | பதம். | ப்ரதிபதம், |
|---|---|---|
| యస్య | யஸ்ய | அநந்தகுணகளுக ப்ரஸித்தனான எந்த ஸர்வேஶ்வரனுடைய |

( మహిమార్ణవశీకరాణుః )

( மஹிமார்ணவஶீகராணுஃ )

| | | |
|---|---|---|
| మహిమార్ణవ | மஹிமார்ணவ | -குண ஸமுத்ரத்தினுடைய |
| శీకరాణుః | ஶீகராணுஃ | திவலையில் அத்யல்பமான அம்ஶமும் |

( శర్వపితామహాద్యైరపి )

( ஶர்வபிதாமஹாத்யைரபி )

| | | |
|---|---|---|
| శర్వ | ஶர்வ | ஜ்ஞானாதிகனான ருத்ரனும் |
| పితామహ | பிதாமஹ | அவனையோதுவித்த ப்ரஹ்மாவும் |
| ఆద్యైరపి | ஆத்யைரபி | பிரஹ்ம பாவனையே யுள்ள ஸநகாதியர்களும் ஆகிய இவர்களாலும் |
| తత్త్వేన | தத்வேந | ஸ்வரூபரூபாதிகளிருந்தபடியே |
| మాతుం | மாதும் | மனத்தினாலும் மொழியினாலும் பரிச்சேதிக்கவும் |
| నశక్యః | நஶக்யஃ | சக்யமன்றோ |

( తదీయమహిమస్తుతిం )

( ததீயமஹிமஸ்துதிம் )

| | | |
|---|---|---|
| తదీయమహిమ | ததியமஹிம | அப்படிப் பட்ட ஸர்வேஶ்வரனது பெருமையினுடைய |
| స్తుతిం | ஸ்துதிம் | ஸ்தோத்திரத்தை |
| కర్తుం | கர்தும் | செய்வதற்கு |
| ఉద్యతాయ | உத்யதாய | உத்யோகித்தவனும் |
| నిరపత్రపాయ | நிரபத்ரபாய | நாம் புகழுகை ஸர்வேஶ்வரனுக்கு நிறக்கேடாமென்றுநாணமில்லாதவனும் |
| కవయే | கவயே | ஏகாம்ஶத்தையும்ஸ்துதிக்கச்சக்தியற்றிருக்கச்செய்தேயும் அதை ஸர்வப்ரகாரத்தாலும் ஸ்துதிக்க மனோரதித்தவனும் |
| మహ్యం | மஹ்யம் | ஸாஹஸம்செய்யத்துணிந்தவனும் ஆன எனக்கு |
| నమః | நமஃ | நமஸ்காரம் |
| అస్తు | அஸ்து | ஆகக்கடவது. |

தாத்பர்யம்.— எல்லா நூற்பொருள்களையும் உணர்ந்தருத்திரனுக்கும், அவனுக்கு ஆசார்யனுய்க்கர்மப்ரஹ்மபாவனையுள்ளபிரஹ்மாவுக்கும், பிரஹ்மபாவனையொன்றுமேயுள்ள ஸநகாதியர்களுக்கும், மற்றெல்லாருக்கும் ஹிதத்தைச்சொல்லும் வேதங்களுக்கும், எவனுடைய பெருமையின்கடற்றிவலையணுவும் உள்ளபடி மனத்தினுலும் வாக்கினுலும் அளவிடக் கூடாததோ, அந்த எம்பெருமானுடைய மஹிமையை உள்ளவும் சொல்லிவிடுகையன்றிக்கே இல்லாததையும் சொல்லி ஸ்துதிக்கத்தொடங்கினவனும், நாம்புகழுகை ஸர்வேஶ்வரனுக்குநிறக்கேடாமென்று நாணமில்லாதவனும், ஏகாம்சத்தையும் ஸ்துதிக்கச் சக்தியற்றிருக்கச்செய்தேயும் அதைஸர்வப்ரகாரத்தாலும் ஸ்துதிக்கமனோரதித்து ஸாஹஸம் செய்யத்துணிந்தவனு மாகிய எனக்கு நமஸ்காரம். ... (எ)

அவதாரிகை.— ஜ்ஞானுதிகரும் தந்தம் ஜ்ஞான சக்தியாதிகளளவும் புகழ்ந்தார்கள் நாம் ஸ்துதிப் பிரியனுகையால் உமக்கும் அவ்வளவு புகழுகைக்கு விரோத மில்லை என்று ஈச்வரன் தானே மூட்ட ஸமாஹிதராகிருர். ... ... ... ... ... ... *

శ్లో॥ యద్వాశ్రమావధియథామతివాప్యశక్తః
స్తౌమ్యేవమేవఖలుతేపిసదాస్తువన్తః।
వేదాశ్చతుర్ముఖముఖాశ్చమహార్ణవాన్తః
కోమజ్జతోరణుకులాచలయోర్విశేషః॥



யத்வாஶ்ரமாவதியதாமதிவாப்யஶக்தஃ
ஸ்தௌம்யேவமேவகலுதேபிஸதாஸ்துவந்தஃ,
வேதாஶ்சதுர்முகமுகாஶ்சமஹார்ணவாந்தஃ
கோமஜ்ஜதோரணுகுலாசலயோர்விஶேஷஃ.

| பதம். | | ப்ரதிபதம். |
|---|---|---|
| యద్వా | யத்வா | முன்பு ஸ்தோத்திரஞ் செய்யச் சக்தனல்லேனென்று நான் நிவருத்தனேன் அங்கனன்றிக்கே |
| అశక్తోపి | அஶக்தோபி | உள்ளபடியறிகைக்கும் சொல்லுகைக்கும் அஶக்தனேயாகிலும் |
| శ్రమావధి | ஶ்ரமாவதி | இளைப்பெல்லையாகவாதல் |
| యథామతివా | யதாமதிவா | ஜ்ஞானமெல்லையாகவாதல் |
| స్తౌమి | ஸ்தௌமி | ஸ்துதிக்கின்றேன் |
| తేపి | தேபி | த்யாஜ்யோபாதேயங்களைப்பிரிக்கைக்கும்த்யாஜ்யத்தைவிட்டு உபாதேயத்திலே அவகாஹிக்கைக்குமடியான ஜ்ஞாநசக்திகளால்மிகுந்துள்ள |
| సదా స్తువన్తః | ஸதாஸ்துவந்தஃ | - ஸர்வகாலத்திலும் ஸ்துதிசெய்கின்ற |
| వేదాః | வேதாஃ | வேதங்களும் |
| చతుర్ముఖము (ఖాశ్చ | சதுர்முகமு (காஶ்ச | த்விபரார்த்தகாலாவதிகரான ப்ர்ஹ்மருத்திரர்களும் அதிகாரா வஸாநத்தளவும்ஸ்துதிக்கின்ற ஸநகாதிகளும் |
| ఏవమేవఖలు | ஏவமேவகலு | ஜ்ஞாந ஶக்தியாதிக ளினளவேயன்றோஸ்துதிக்கின்றனர் (ஆகையால் எனக்கும் அவர்களுக்கும் உள்ளபடிபேசமாட்டாமையிலே வாசியில்லை எதுபோலே யென்னில்) |
| మహార్ణవాన్తః | மஹார்ணவாந்தஃ | பெருங்கடலினுள்ளே |
| మజ్జతోః | மஜ்ஜதோஃ | அமிழாநிற்கின்ற |
| అణుకులాచల (యోః | அணுகுலாச (லயோஃ | அணுவுக்கும் குலபர்வதத்திற்கும் |
| విశేషః | விஶேஷஃ | ஒன்றுக்கொன்று அதிசயமானது |
| కః | கஃ | எது ( இல்லை ) |

தாத்பர்யம்.— அடியேன் எம்பெருமானுடைய ஸ்வரூபாதிகளை உள்ளபடி அறிகைக்கும் சொல்லுகைக்கும் அஶக்தனேயாகிலும் இளைப்

பெல்லையாகவாதல், ஜ்ஞான மெல்லையாகவாதல், ஸ்துதிக்கின்றேன். த்யாஜ்யோபாதேயங்களைப் பிரிக்கைக்கும் த்யாஜ்யத்தைவிட்டு உபாதேயத்திலே அவகாஹிக்கைக்கும் அடியான ஜ்ஞானசக்திகளால் மிகுந்துள்ளவையாய் ஸர்வகாலத்திலும் ஸ்துதிசெய்கின்ற வேதங்களும், த்விபரார்த்தகாலம் ஆயுளுள்ள பிரஹ்மருத்ரர்களும் அதிகாராவஸாநத்தளவும் ஸ்துதிக்கின்ற ஸநகாதியர்களும் ஜ்ஞான சக்திகளினளவேயன்றோ ஸ்துதிக்கின்றனர் ஆகையால் எனக்கும் அவர்களுக்கும் உள்ளபடி பேசமாட்டாமையிலே வாசியில்லை எதுபோலே என்னில் பெருங் கடலிநடுவில் அமிழாநிற்கின்ற அணுவினோடு குலாசலத்திற்கு என்ன விசேஷமிருக்கின்றது. ... ... ... ... ... (அ)

அவதாரிகை.— ப்ரஹ்மாதிகளினும் எனக்கு ஸ்தோத்ரத்தி லிழிகைக்கு அதிக ஹேது உண்டென்கிறார். ... ... ... *

శ్లో॥ కిఞ్చైష శక్త్యతిశయేన న తేఽనుకంప్యః
స్తోతాపి తు స్తుతికృతేన పరిశ్రమేణ।
తత్ర శ్రమస్తు సులభో మమ మన్దబుద్ధే
రిత్యుద్యమోఽయముచితో మమ చాబ్జనేత్ర॥

கிஞ்சைஷசக்த்யதிசயேநநதேனுகம்ப்ய:
ஸ்தோதாபிதுஸ்துதிக்ருதேநபரிச்ரமேண,
தத்ரச்ரமஸ்துஸுலபோமமமந்தபுத்தே:
இத்யுத்யமோயமுசிதோமமசாப்ஜநேத்ர.

| பதம். | | ப்ரதிபதம், |
|---|---|---|
| కించ | கிஞ்ச | பின்னும் |
| ఏషః | ஏஷ: | உன்விஷயத்தில் ஆபிமுக்யத்தினாலே ஸம்ஸாரிகளில் விலக்ஷணனாகி |
| స్తోతా | ஸ்தோதா | வாய் பெற்றதற்குப்பயனிது வென்று உன்னை ஸ்துதிப்பவன் |
| శక్త్యతిశయేన | சக்த்யதிசயேந | ஸாமர்த்யாதி சயத்தினாலே (நம்மைஸ் துதிக்கமிக்கவல்லவனென்பதினால்) |
| తే | தே | உனக்கு |
| నానుకంప్యః | நாநுகம்ப்ய: | தயைசெய்யத்தக்க பாத்திரனல்லன் |
| అపితు | அபிது | எதனாலெ நீ கருணைசெய்வதெனின் |



(ரு)

| | | |
|---|---|---|
| స్తుతికృతేన | ஸ்துதிக்ருதேந- | உன்னைஸ்துதிக்கையிலே மிகுந்தவிருப்பங்கொண்டு அதுக்கீடான சக்தியில்லாமையாலே புகழவுந் தவிரவு மாட்டாமையினால்உண்டாகின்ற |
| పరిశ్రమేణ | பரிஶ்ரமேண | இளைப்பாலே (நீஇரங்குவது) |
| తత్ర | தத்ர | அர்த்தம் இப்படியாய் நின்ற விடத்தில் |
| మన్దబుద్ధేః | மந்தபுத்தே: | அல்பபுத்தியுடையேனாகிய |
| మమతు | மமது | எனக்கே |
| శ్రమః | ஶ்ரம: | ஶ்ரமம் |
| సులభః | ஸுலப: | குறைவற உண்டா யிருக்கின்றது |
| ఇతి | இதி | இந்தக் காரணத்தால் |
| అబ్జనేత్ర | அப்ஜநேத்ர | நிர்விக்நமாக ஸ்தோத்திரத்தைத் தலைக்கட்டும்படி கடாக்ஷிக்கவல்ல அழகிய திருக்கண்களையுடையவனே (நீகடாக்ஷித்தருளினால்) |
| అయం | அயம் | இந்த |
| ఉద్యమః | உத்யம: | ஸ்தோத்திரத்தொடக்கமானது |
| మమచ | மமச | எனக்கே |
| ఉచితః | உசித: | தக்கது. |

தாத்பர்யம்.— ஓப்ரபுவே! வாய்பெற்றதர்க்கு ப்ரயோஜனமிதுவென்று உன்னை ஸ்துதிப்பவனை இவன்ஸ்துதிக்க வல்லவனென்று நீதயை பண்ணுகிறதில்லை பின்னை எதனாலேயென்றால் உன்னை ஸ்துதிக்கையிலே அதிக விருப்புக் கொண்டு அதர்க்கீடான சக்தி யில்லாமையாலே புகழவுந்தவிரவுமாட்டாமையால் அவன் படுமிளைப்பைக்கண்டு நீ தயை பண்ணுகின்றாய் இப்படியாகுமிடத்தில் அல்பஜ்ஞானமுடைய அடியேனுக்கே ஶ்ரமம் குறைவற உண்டாயிருக்கின்றதுஇந்தக்காரணத்தால் நிர்விக்நமாகஸ்தோத்திரத்தைத் தலைக்கட்டும்படி கடாக்ஷிக்கவல்ல அழகிய திருக்கண்களையுடையவனே! நீகடாக்ஷித்தருளினால் இந்த ஸ்தோத்திரத்தொடக்க மானது எனக்கேதக்கது. ... ... ... (கூ)

அவதாரிகை.— இப்படி ஸ்தோத்ராக்ஷேபஸமாதானத்தைப்பண்ணி, ஈஶ்வரனுடைய சரண்யதைக்குறுப்பான பகவத்பரத்வத்தை, மேலஞ்சுஶ்லோகத்தாலே அருளிச்செய்கிறார். ... ... ... *

இதில், முதல்ஶ்லோகத்தாலே, ஸத்ப்ரஹ்மாதிஸாமான்யவாசிசப்தங்களாலே ஜகத்காரணமாக ப்ரதி பாதிக்கப்படுகிறான் நாராயண

னென்று, கதிஸாமான்யந்யாயத்தாலேகாரணவாக்யவிஷயமான பரத்வத்தை அருளிச்செய்கிறார்.... ... ... ... ❋

శ్లో॥ నావేక్షసే యది తతో భువనాన్యమూని
నాలం ప్రభో భవితుమేవ కుతః ప్రవృత్తిః।
ఏవం నిసర్గసుహృది త్వయి సర్వజన్తోః
స్వామిన్న చిత్రమిదమాశ్రితవత్సలత్వమ్॥

நாவேக்ஷஸேயதிததோபுவநாந்யமூநி
நாலம்ப்ரபோபவிதுமேவகுதஃப்ரவ்ருத்திஃ,
எவம்நிஸர்கஸுஹ்ருதித்வயிஸர்வஜந்தோஃ
ஸ்வாமின்னசித்ரமிதமாஶ்ரிதவத்ஸலத்வம்

| பதம். | | பிரதிபதம். |
|---|---|---|
| నావేక్షసే యది | நாவேக்ஷஸே (யதி | அசித் கல்பரான சேதனரைப் பற்றி ஆதியில்நீ ஸங்கற்பிக்காவிட்டால் |
| తతః | ததஃ | பின்பு |
| అమూని | அமூநி | போகமோக்ஷங்களை ஸாதித்துக் கொள்ளுகைக்கு உபயுக்தங்களாகிய |
| భువనాని | புவநாநி | பதினன்கு லோகங்களும் |
| భవితుమేవ | பவிதுமேவ | உண்டாவதற்கே |
| నాలం | நாலம் | ஶக்தி உள்ளன அல்ல |
| ప్రవృత్తిః | ப்ரவ்ருத்திஃ | இவ்வுலகங்களுக்கு ப்ரவ்ருத்தி யானது |
| కుతః | குதஃ | உன்கடாக்ஷபலமன்றி வேறு எதனல் உண்டாகும் |
| ప్రభో | ப்ரபோ | ஜகத் காரணத்வத்தினல் வந்த ஐஶ்வர்ய முள்ளவனே |
| సర్వజంతోః | ஸர்வஜந்தோஃ | ப்ரஹ்மாதி ஸர்வஜந்துவுக்கும் |
| ఏవం | எவம் | இப்படி காணகளேபரங்களைக் கொடுத்துக் குறைதீர்த்த |
| నిసర్గసుహృది | நிஸர்கஸுஹ்ருதி- | அகாரணஸுஹ்ருத்தான |
| త్వయి | த்வயி | உன்பக்கல் |
| స్వామిన్ | ஸ்வாமின் | ஸர்வஶேஷியான ஸ்ரீயப்பதியே |
| ఇదం | இதம் | உன் ஸ்தோத்திரத்தைச்சொல்லவல்லனும்படி செய்ய |
| ( ఆశ్రితవత్సలత్వం ) ( ஆஶ்ரிதவத்ஸலத்வம் ) | | |
| ఆశ్రిత | ஆஶ்ரித | என்பக்கல் உண்டான |
| వత్సలత్వం | வத்ஸலத்வம் | வாச்சல்யமானது |
| నచిత్రం | நசித்ரம் | உனக்காச்சரியமோ |



தாத்பர்யம்.— அநாதிகாலம் பண்ணிப்போந்த அபராதங்களைப் பாராதே அவற்றின் துர்க்கதியைப்பார்த்துக்ருபாபரதந்த்ரனகி அசித்கல்பரான சேதனரைப்பற்றி ஆதியில் நீ சங்கற்பிக்கா விட்டால் போகமோக்ஷங்களை ஸாதித்துக் கொள்ளுகைக்கு உபயுக்தங்களாகிய பதினன்குலோகங்களும் உண்டாகவேமாட்டா. ஓஜகத்காரணத்வத்தினல்வந்த ஐஶ்வர்யமுள்ளவனே! உன்சங்கற்பமொழிய உண்டாகமாட்டாத இவ்வுலகங்களுக்கு ப்ரவிர்த்தி நிவர்த்தி முதலியவை உன்கடாக்ஷபலமன்றி வேறு எதனல் உண்டாகும். தன்னையொழிந்த ஸகல சேதனசேதனங்களையும் அநந்யார்ஹ ஶேஷமாக உடையவனே! ப்ரஹ்மாதி ஸ்தாவராந்தமான ஸர்வஜந்துவுக்கும்கரணகளேபரங்களைக்கொடுத்துக் குறைதீர்த்த அகாரணஸுஹ்ருத்தான உன்பக்கல் அவாங்மன ஸகோசரமான உன் ஸ்தோத்திரத்தைச் சொல்லத்தக்கவனுகும்படி யென்விஷயத்தில்உண்டான வாச்சல்யமானது ஆச்சர்யமோ. ... ... (க0)

அவதாரிகை.— கீழ்கதி ஸாமான்யந்யாயத்தாலே, நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்றது, இதில், விசேஷவாசியான சிவசம்ப்வாதிவாக்யங்களாலும் ப்ரதிபாதிக்கப் படுகிறன் நாராயணனேயென்று ஸர்வவேதாந்தவ்யாக்யாநமாய், அநந்யபரமான நாராயணனுவாக ஸித்தமானபகவத்பரத்வத்தை அருளிச்செய்கிறார்.... ... ... ❋

శ్లో॥ స్వాభావికానవధికాతిశయేశితృత్వం
నారాయణ త్వయి న మృష్యతి వైదికః కః।
బ్రహ్మా శివశ్శతమఖః పరమస్స్వరాడి
త్యేతేఽపి యస్య మహిమార్ణవవిప్రుషస్తే॥

ஸ்வாபாவிகாநவதிகாதிசயேசித்ருத்வம்
நாராயணத்வயிநம்ருஷ்யதிவைதிகஃகஃ,
ப்ரஹ்மாசிவஶ்ஶதமகஃபரமஸ்வராடித
யேதேபியஸ்யமஹிமார்ணவவிப்ருஷஸ்தே.

| | பதம். | ப்ரதிபதம் |
|---|---|---|
| నారాయణ | நாராயண | ஸர்வாதாரபூதனாய், ஸர்வாந்தர்யாமியாய், ஸர்வஸ்மாத்பரனாய், ஸர்வஸுலபனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், ஸர்வருக்கும்ஶேஷியாய், ப்ராப்ய ப்ராபக பூதனான ஸ்ரீயப்பதியே |
| త్వయి | த்வயி | ஸர்வாதிகனான உன்பக்கல் |

( స్వాభావికానవధికాతిశయేశితృత్వం )
( ஸ்வாபாவிகாநவதிகாதிஶயேஶித்ருத்வம் )

| | | |
|---|---|---|
| స్వాభావిక | ஸ்வாபாவிக | ஸ்வபாவஸித்தமாய் |
| అనవధికాతిశ (యే | அநவதிகாதி (ஶய | நிரவதிகமான அதிஶயத்தை உடையதான |
| ఈశితృత్వం | ஈசித்ருத்வம் | உபயவிபூதி ஸாம்ராஜ்யத்தை |
| వైదికః | வைதிகः | வேதார்த்தத்தை அறிந்த |
| కః | கः | எவன் |
| నమృష్యతి | நம்ருஷ்யதி | பொறுதே யொழிகின்றான் |
| బ్రహ్మా | ப்ரஹ்மா | சதுர்முகனும் |
| శివః | சிவः | ருத்ரனும் |
| శతమఖః | ஶதமகः | இந்திரனும் |
| పరమః | பரமः | ப்ரஹ்மாதிகளினும் உயர்ந்த |
| స్వరాట్ | ஸ்வராட் | முக்தாத்மாவும் |
| ఇతి | இதி | ஈஶ்வரரென ப்ரமாணங்களால் புகழப் (படுகின்ற |
| ఏతేపి | ஏதேபி | இவர்களும் |
| యస్య | யஸ்ய | ஸர்வவேதாந்தப்ரஸித்தனான |
| తే | தே | உன்னுடைய |

( మహిమార్ణవవిప్రుషః )
( மஹிமார்ணவ விப்ருஷः )

| | | |
|---|---|---|
| మహిమార్ణవ | மஹிமார்ணவ- | கடல்போன்ற மஹிமையிலே |
| విప్రుషః | விப்ருஷः | ஒரு பிந்துமாத்ரமே யான மஹிமையுடையவரா கின்றார்களோ |

தாத்பர்யம்.— ஸர்வாதாரபூதனாய், ஸர்வாந்தர்யாமியாய், ஸர்வஸ்மாத்பரனாய், ஸர்வஸுலபனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், ஸர்வருக்கும் ஶேஷியாய், ப்ராப்யப்ராபகபூதனான ஓ ஸ்ரீயப்பதியே! பிரமனும் சிவனும், இந்திரனும், கர்மபந்த மில்லாமையினாலும், யாவும் அறியவல்லபேரறிவு உடைமையினாலும் பிரஹ்மாதிகளினும் உயர்ந்தமுக்தாத்மாவும் இவர்கள் எல்லாரும் எந்த உன்னுடைய கடல்போன்ற மஹிமையிலேஒருசிறுதுளியைப்போன்றமஹிமையுடையவராகிறார்களோ, அப்படிப்பட்ட மஹிமையுடையவனாய், வேதாந்தங்களில் ஸர்வாதிகனாகத் துணிந்து சொல்லப்படுமவனாய், இவ்வாத்மாவுக்குவகுத்தவனுமாயிருக்கிற உன்பக்கல் ஸ்பாவ ஸித்தமாய்த் தனக்கு மேற்பட்ட யாதொரு அதிசயமில்லாதபடி எல்லாவற்றிலு முயர்ந்ததான உன்னுடைய உபய விபூதி ஸாம்ராஜ்யத்தை வேதத்தின் பொருளை அறிந்திருக்கிற எவன்பொறுதே யொழிகின்றான். ... ... ... ... ... (கக)



அவதாரிகை.— பாஹ்யமதஸ்தர்களுக்கும் ஸம்சயிக்கத்தகாதவைகளாய்த்தனித்தனியே பூர்ணமாய் அஸாதாரணங்களான ஸ்ரீயப்பதித்வாதிசிந்ஹங்களினாலே பகவத்பரத்வத்தை அருளிச்செய்கிறார். ... ... *

శ్లో॥ కశ్శ్రీశ్శ్రియః పరమసత్త్వసమాశ్రయః కః
కః పుణ్డరీకనయనః పురుషోత్తమః కః।
కస్యాయుతాయుతశతైకకలాంశకాంశే
విశ్వం విచిత్రచిదచిత్ప్రవిభాగవృత్తమ్॥

கஶ்ரீஶ்ரியःபரமஸத்வஸமாஶ்ரயःகः
கःபுண்டரீகநயநःபுருஷோத்தமःகः,
கஸ்யாயுதாயுதஶதைககலாம்சகாம்சே
விஶ்வம்விசித்ரசிதசித்ப்ரவிபாகவ்ருத்தம்

| | பதம். | ப்ரதிபதம், |
|---|---|---|
| శ్రియః | ஸ்ரீயः | நித்யமுக்த பிரஹ்மசிவேந்திராதி ஸகலசேதனருந் தந்த முடைய ஸ்வரூப ஸ்தித்யாதிகளுக் காகப் பற்றவேண்டிய மேன்மை யுடைய பெரியபிராட்டியாருக்கும் |
| శ్రీః | ஸ்ரீः | தன்னுடை ஸ்வரூபஸ்தித்யாதி களுக்காக ஆஶ்ரயிக்கத் தக்க மேன்மையுடையவன் |
| కః | கः | உன்னைக்காட்டிலும் எவனுளன் |
| పరమసత్త్వస (మాశ్రయః | பரமஸத்வஸ (மாஶ்ரயः | சுத்த ஸ்த்வ ஸ்வரூபமான விக்ரஹாதிகளையுடையவன் |

| | | |
|---|---|---|
| మహిష్ఠఫలప్ర(దానైః | மஹிஷ்டபல (ப்ரதாநை: | தன்னையாராதித்ததினாலே லோகமடங்கஈஸ்வரரென்றுகொண்டாடும்படியானபதங்களைக்கொடுக்கையாலும் |
| ప్రజాపశుపతీ | ப்ராஜாபசுபதீ | ப்ரஹ்ம ருத்திரர்களை |
| అన్యః | அந்ய: | உன்னைக்காட்டிலும்வேறாயிருக்கும் |
| కః | க: | எவன் |
| పరిపాతి | பரிபாதி | ரக்ஷிக்கின்றான் |
| స్వశిరోధృతేన | ஸ்வஶிரோத்ரு(தேந | தன்சிரஸ்ஸினாலேதரிக்கப்பட்டிருக்கிற |
| కస్య | கஸ்ய | எவனுடைய |
| పాదోదకేన | பாதோதகேந | ஸ்ரீபாததீர்த்தமானகங்கையினாலே |
| సః | ஸ: | அந்த சிவன் |
| శివః | ஶிவ: | பரிசுத்தனானான். |

தாத்பர்யம்.— பிரமன்மதுகைடபர்களால் வேதங்களைப்பறிகொடுத்தபோது அவனையும், லோககுருவும் பிதாவுமானப்ரஹ்மாவின் தலையைத் துர்மானத்தினாலறுத்துப் பாதகனான பசுபதியையும் ப்ரஹ்மகபாலவிமோசனாதிகளாலே ரக்ஷித்துத் தலையறுப்புண்டப்ரஹ்மாவையும் ஜீவிக்கும்படிபண்ணி, அந்த காஸுரன், வ்ருகன், த்ரிபுராதிகள், ஹிரண்யராவணாதிகள் இவர் முதலான அஸுராளாலே நேரிட்ட பீடையையும் போக்கி இவர்களுக்குத்தன்னையாராதித்ததினாலே லோகமடங்கஈஸ்வரரென்று கொண்டாடும் படியான பதங்களையும், ஸ்ருஷ்டி ஸம்ஹாரத்தொழிலையும், உயர்ந்த ஐஸ்வர்யத்தையுங்கொடுத்து ரக்ஷித்தவன் உன்னைக்காட்டிலும் எவனுளன்? உன்னினும் வேறு எவனுடைய ஸ்ரீபாததீர்த்தமான கங்கையை ஶிரஸில் தரித்து அந்த ச்சிவன் பரிசுத்தனானான்.... ... ... ... ... ... ... (கரு)

அவதாரிகை.— ப்ரமாணாநுகூல தர்க்க ரூபந்யாயத்தாலே கீழ்ச்சொன்ன பரத்வத்தை முடிக்கிறார்... ... ... ... *

శ్లో॥ కస్యోదరే హరవిరించిముఖః ప్రపంచ
కో రక్షతీమమజనిష్ట చ కస్య నాభేః।
క్రాంత్వా నిగీర్య పునరుద్గిరతి త్వదన్యః
కః కేన వైష పరవానితి శక్యశంకః॥

கஸ்யோதரேஹரவிரிஞ்சிமுக:ப்ரபஞ்ச:
கோரக்ஷதீமமஜநிஷ்டசகஸ்யநாபே:,



க்ராந்த்வாநிகீர்யபுநருத்கிரதித்வதந்ய:
க:கேநவைஷபரவாநிதிஶக்யஶங்க:.

| | பதம். | ப்ரதிபதம். |
|---|---|---|
| హరవిరించిము(ఖః | ஹரவிரிஞ்சி(முக: | ப்ரஹ்மருத்ராதியான |
| ప్రపంచః | ப்ரபஞ்ச: | ப்ரபஞ்சமானது (மஹாப்ரளயத்திலே |
| కస్య | கஸ்ய | யாருடைய |
| ఉదరే | உதரே | வயிற்றிலே அடங்கியிருக்கிறது |
| ఇమమ్ | இமம் | இந்த ப்ரபஞ்சத்தை |
| కః | க: | எவன் |
| రక్షతి | ரக்ஷதி | ரக்ஷிக்கின்றான் |
| కస్య | கஸ்ய | எவனுடைய |
| నాభేః | நாபே: | நாபியினின்று |
| అజనిష్టచ | அஜநிஷ்ட_ச | உண்டாயிற்று |
| త్వదన్యః | த்வதந்ய: | உன்னினும் அந்யனான |
| కః | க: | எவன் |
| క్రాంత్వా | க்ராந்த்வா | திரிவிக்ரமனாக அளந்து |
| నిగీర్య | நிகீர்ய | ப்ரளயத்தில் விழுங்கி |
| పునః | புந: | மீளவும் |
| ఉద్గిరతి | உத்கிரதி | உமிழ்கிறான் |
| కేనవా | கேநவா | நின்னினும் வேறு எவனாலே |
| ఏషః | ஏஷ: | இந்த ப்ரபஞ்சமானது |
| పరవానితి | பரவாநிதி | பராதீனமாயிருக்கிறதென்று |
| శక్యశంకః | ஶக்யஶங்க: | ஸந்தேஹிக்கத்தக்கதாயிருக்கின்றது. |

தாத்பர்யம்.— பிரமன் சிவன் முதலான சேதநர்களும் அவர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தானங்களாகப் பரிணமித்திருக்கிற அசேதநங்களுமாயுள்ள இந்த ப்ரபஞ்ச மெல்லாம் மஹா ப்ரளயத்தில் எவன்வயிற்றில் அடங்கியிருக்கின்றன. மஹாப்ரளயத்திலே அவிபக்தமாய்க்கிடக்கும் ப்ரபஞ்சம் யாருடைய குக்ஷியினின்றும் உத்பன்னமாயிற்று. எவன் இதைரக்ஷிக்கின்றான். எவன் இவ்வுலகத்தை அளந்தும் விழுங்கியும் உமிழ்கின்றான். இப்படி உனக்கே சேஷபூதமான சேதநாசேதநரூப ப்ரபஞ்சமானது உன்னைக்காட்டிலும் வேறு எவனுக்காவது ஸ்வாதீனமென்று ஸந்தேஹிக்க இடமிருக்கின்றதா. ... ... (கச)

அவதாரிகை.— இப்படி ஸர்வேஶ்வரன் த்ரட ப்ரமாண ஸித்தனாயிருக்க ஆஸுரப்ரகிருதிகளான சிலர் அவனை இழக்கிறார்களே என்று அவர்களிழவுக்கு வெறுக்கிறார்.... ... ... ... ... ... . ... *

ஶ్లో॥ త్వాంశీలరూపచరితైఃపరమప్రకృష్ట
సత్త్వేనసాత్త్వికతయాప్రబలైశ్చశాస్త్రైః।
ప్రఖ్యాతదైవపరమార్థవిదాంమతైశ్చ
నైవాసురప్రకృతయఃప్రభవంతిబోద్ధుమ్॥

த்வாம்சீலரூபசரிதை:பரமப்ரக்ருஷ்ட
ஸத்வேநஸாத்விகதயாப்ரபலைஶ்சசாஸ்த்ரை:,
ப்ரக்யாததைவபரமார்த்தவிதாம்மதைஶ்ச
நைவாஸுரப்ரக்ருதய:ப்ரபவந்திபோத்தும்

பதம். ப்ரதிபதம்.

( శీలరూపచరితైః )
( ஶீலரூபசரிதை: )

| | | |
|---|---|---|
| శీల | ஶீல | ஸௌஶீல்யகுணம் |
| రూప | ரூப | அப்ராக்ருதமானதிவ்யமங்களவிக்ரஹம் |
| చరితైః | சரிதை: | அதிமாநுஷ சரித்திரங்கள் ஆகிய இவைகளாலும் |

( పరమప్రకృష్టసత్త్వేన )
( பரமப்ரக்ர்ஷ்டஸத்வேந )

| | | |
|---|---|---|
| పరమప్రకృష్ట | பரமப்ரக்ர்ஷ்ட | - ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலவாமல் ஶ்ரேஷ்டமாய் |
| సత్త్వేన | ஸத்வேந | சுத்தஸத்வமயமான நித்யவிபூதி யோகத்தாலும் |
| సాత్త్వికతయా | ஸாத்விகதயா | ஸாத்விககற்பத்தில் சொல்லுகையாலே |
| ప్రబలైః | ப்ரபலை: | ப்ரபலங்களான |
| శాస్త్రైశ్చ | ஶாஸ்த்ரைஶ்ச-ஶாஸ்த்ரங்களாலும் | |

( ప్రఖ్యాతదైవపరమార్థవిదాం )
( ப்ரக்யாததைவபரமார்த்தவிதாம் )

| | | |
|---|---|---|
| ప్రఖ్యాత | ப்ரக்யாத | ப்ரஸித்தமான |
| దైవపరమార్థ | தைவபரமார்த்த-தேவதாபாரமார்த்யத்தை | |



| | | |
|---|---|---|
| విదాం | விதாம் | அறிந்தவர்களான பராசராதிகளுடைய |
| మతైశ్చ | மதைஶ்ச | ஸித்தாந்தங்களாலும் |
| ఆసురప్రకృతయః | ஆஸுரப்ராக்ருதய: | தாமஸஸ்வபாவராகியசிலர் |
| త్వాం | த்வாம் | ஸர்வாதிகனாய் இவ்வாத்மாக்களுக்கு வகுத்தசேஷியான உன்னை |
| బోద్ధుమేవ | போத்துமேவ | அறிந்துகொள்ளுகைக்கே |
| నప్రభవంతి | நப்ரபவந்தி | ஸமர்த்தரல்லர் |

தாத்பர்யம்.— ஓ ஶ்ரீயப்பதியே! ஸர்வாதிகனாயிருந்தும் தாழ்ந்தவரோடு இடை விடாமல் கலந்திருக்கை யாகிற ஸௌஶீல்ய குணத்தினாலும், அப்ராகிருத திவ்யமங்களவிக்ரஹத்தினாலும், அதிமாநுஷசரித்திரங்களாலும், சுத்த ஸத்வமயமான நித்ய விபூதி யோகத்தாலும், வேதத்தில் ஸாத்விகருக்கு ஹிதத்தைச் சொல்லுகின்ற ஜ்ஞான பாகத்தாலும், ஸாத்விக கற்பத்தில் சொல்லுகையாலே ப்ரபலங்களான ஶாஸ்திரங்களாலும். ப்ரஸித்தமான பரதேவதாபாரமார்த்யத்தை அறிந்திருக்கின்ற ஶ்ரீ பராசராதிகளுடைய மதங்களாலும், ஆஸுர ப்ரகிருதிகளான சில நிர்ப்பாக்யர்கள் உன்னை அறியமாட்டார்கள். ... ... (௧௫)

அவதாரிகை.— உன்னை ஸத்ப்ரகிருதிகளான சில மஹாத்மாக்கள் காணப் பெறுகிறார்களென்று அதைத் தம்பேறாக நினைத்து ஆநந்திக்கிறார். ... ... ... ... ... *

ஶ్లో॥ ఉల్లంఘితత్రివిధసీమసమాతిశాయి
సంభావనంతవపరిబ్రఢిమస్వభావం।
మాయాబలేనభవతాపినిగూహ్యమానం
పశ్యన్తికేచిదనిశంత్వదనన్యభావాః॥

உல்லங்கிதத்ரிவிதஸீமஸமாதிசாயி
ஸம்பாவனந்தவபரிப்ரடிமஸ்வபாவம்-
மாயாபலேநபவதாபிநிகூஹ்யமானம்
பச்யந்திகேசிதநிசம்த்வதநந்யபாவா:

பதம். ப்ரதிபதம்.

| | | |
|---|---|---|
| ఉల్లంఘితత్రివిధసీమసమాతిశాయిసంభావనం | உல்லங்கிதத்ரிவிதஸீமஸமாதிஶாயிஸம்பாவநம் | த்ரிவித பரிச்சேத மற்றதாய் ஸமாநாதிகவஸ்து உண்டென்கிற நினைவையுங்கடந்துள்ள |

| | | |
|---|---|---|
| తవ | தவ | உன்னுடைய |
| పరిబ్రఢిమస్వభావం | பரிப்ரடிமஸ்வபாவம் | ப்ரபுத்வத்தை |
| మాయాబలేన | மாயாபலேந | உன் ஸ்வரூபத்தை மறைக்கும் ப்ரகிருதிபலத்தாலும் |
| భవతా | பவதா | உன்னாலும் |
| నిగూహ్యమానమపి | நிகூஹ்யமாநமபி | மறைக்கப்பட்டதே யாகிலும் |
| త్వదనన్యభావాః | த்வதநந்யபாவாः | உன்னையொழிய வேறுசேஷியையும் உபாயோபேயங்களையும் அறியாத |
| కేచిత్ | கேசித் | ஸத்ப்ரக்ருதிகளானசிலமஹாத்மாக்கள் |
| అనిశం | அநிஶம் | ஸர்வகாலத்திலும் |
| పశ్యంతి | பஶ்யந்தி | உள்ளபடி காண்கிறார்கள். |

தாத்பர்யம்.— ஸர்வதேசவ்யாபி யாகையாலே தேசத்தினால் பரிச்சேதிக்கக்கூடாததாய், நித்யமாகையாலே காலத்தினால் பரிச் சேதிக்கக் கூடாததாய்த் தனக்குச் சமமான வஸ்து யில்லாமையாலே வஸ்துவினால் பரிச்சேதிக்கக் கூடாததுமாய், ஸமாநாதி கரஹிதமான உன்னுடைய ப்ரபுத்வ மானது திவ்ய விக்ரஹத்தை இதரஸஜாதிய மாக்கும் உன்னுடைய ஆச்சரிய சக்தி யோகத்தாலும் உன்னாலும் மறைக்கப்பட்டதே யாகிலும் அதை உன்னை யொழிய வேறு நினைவில்லாதவர்களாய், உன்னையொழிய உபாயோபேயங்களை யறியாதவர்களாயுள்ள ஸத்ப்ரகிருதிகளாகிய சில மஹாத்மாக்கள் ஸர்வ காலத்திலும் உள்ளபடி காணுகின்றார்கள். ... ... ... ... ... (கசு)

அவதாரிகை.— கீழ் ஸர்வேஶ்வரனென்று ப்ரதிபாதித்த ஸ்ரீமந்நாராயணனுக்குச் சேஷபூதமான வஸ்துக்களை விஸ்தரித்தருளிச் செய்கிறார். ... ... ... ... ... ... *

శ్లో। యదండమండాంతరగోచరఞ్చయత్
దశోత్తరాణ్యావరణానియానిచ।
గుణాఃప్రధానంపురుషఃపరంపదం
పరాత్పరంబ్రహ్మచతేవిభూతయః॥

யதண்டமண்டாந்தரகோசரஞ்சயத்
தஶோத்தராண்யாவரணாநியாநிச-



குணாःப்ரதாநம்புருஷःபரம்பதம்
பராத்பரம்ப்ரஹ்மசதேவிபூதய:-

| | பதம். | ப்ரதிபதம். |
|---|---|---|
| యత్ | யத் | எந்த |
| అండమ్ | அண்டம் | பதினான்குலோகங்களடங்கிய அண்டஸமூகம் |
| యచ్చ | யச்ச | எந்த |
| అండాంతరగోచరం | அண்டாந்தரகோசரம் | அண்டாதிப த்ரிலோகேஶ்வர திக்பால நரபதி ப்ரமுகமாய் ஸ்தாவர ஜங்கம ஸ்வரூபமாய் அண்டத்துளடங்கியவை |
| యానిచ | யாநிச | எந்த |
| దశోత్తరాణి | தஶோத்தராணி | மேன்மேலும் தஶகுணிதங்களான * அண்டாவரணங்கள் |
| గుణాః | குணாः | ஸத்வாதி குணங்கள் |
| ప్రధానం | ப்ரதாநம் | விகாரமடையாத ப்ரகிருதிப்ரதேஶம் |
| పురుషః | புருஷः | பத்த சேதநவர்க்கம் |
| పరంపదమ్ | பரம்பதம் | பரமபதம் |
| పరాత్పరమ్ | பராத்பரம் | ப்ரஹ்மாதிகளினும் முக்தரினும் பரரான நித்யர் |
| బ్రహ్మచ | ப்ரஹ்மச | சுத்த ஸத்வமயமாய்ப் பரஞ்சோதிர்மயமாய் ஸௌந்தர்யாதி கல்யாண குணோபேதமான திவ்யமங்கள விக்ரஹம் ஆகிய அவை எல்லாம் |
| తే | தே | உனக்கு |
| విభూతయః | விபூதய: | சேஷவஸ்துவாகாநின்றன. |

தாத்பர்யம்.— ஓ ஸ்ரீ யப்பதியே! பதினான்கு லோகங்களடங்கிய அண்டஸமூகமும் அண்டாதிபதிகளும் திரிலோ கேஶ்வரரும் திக்பாலகர்களும் நரபதிகளும் ஸ்தாவரஜங்கம ஸ்வரூபமாய் அவ்வண்டத்துள்ளடங்கிய வஸ்துக்களும் மென்மேலும் பதின்மடங்கு அதிகமான அண்டத்தின் ஸப்தாவரணங்களும் ஸத்வாதி குணங்களும் ப்ரகிருதியும் பத்த சேதந ஸமஷ்டியும் பரமபதமும் ப்ரஹ்மாதிகளினும் முக்தரினும் விலக்ஷணரான நித்யரும் சுத்த ஸத்வமயமாய் பரஞ்சோதி ஸ்வரூப

---

* அண்டாவரணங்களாவன அப்பு, தேயு, வாயு, ஆகாசம், அஹங்காரம், மஹத்தத்வம், கார்யோன் முகமான ப்ரகிருத்யம்சம்.

மாய் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி கல்யாண குணோ பேதமான திவ்யமங்கள விக்ரஹமும் உனக்கே சரீரமாக நின்று சேஷ பூதங்களாகின்றன. ... ... ... ... ... (௧௭)

அவதாரிகை.— கீழ்ஸ்ரண்யனுடைய உத்கர்ஷம் சொல்லி இதில் உபயவிபூதி நாதனை நம்மால் கிட்டலாமோ வென்று கூசாதபடி ஆஶ்ரிதருக்கு இழியுந்துறையான கல்யாணகுணங்களிலே பன்னிரண்டு குணங்களை அருளிச் செய்கிறார். ... ... ... ... *

శ్లో॥ వశీ వదాన్యో గుణవానృజుశ్శుచి
ర్మృదుర్దయాళుర్మధురస్స్థిరస్సమః।
కృతీ కృతజ్ఞస్త్వమసి స్వభావత
స్సమస్తకల్యాణగుణామృతోదధిః॥

வசீவதான்யோகுணவான்ருஜுஶ்ஶுசிஃ
ம்ருதுர்தயாளுர்மதுரஸ்திரஸ்ஸமஃ,
க்ருதீக்ருதஜ்ஞஸ்த்வமஸிஸ்வபாவதஃ
ஸமஸ்தகல்யாணகுணம்ருதோததிஃ.

| பதம், | | ப்ரதிபதம். |
|---|---|---|
| వశీ | வஶீ | ஸகலத்தையும்தன்வசத்திலே நடத்தி வர்த்திப்பவனும் (அன்றிக்கே) அநுகூலர் விஷயத்திலேதாழ நிற்பவனும் |
| వదాన్యః | வதாந்யஃ | ப்ரியவசநத்தோடு தன்னையும் தன்னுடைமையையும் ஆஶ்ரிதருக்குக் கொடுப்பவனும் |
| గుణవాన్ | குணவான் | தான் உயர்ந்தவனாயிருந்தும் தாழ்ந்தவரோடு கலந்திருக்கையாகிற ஸௌசீல்ய குணமுடையவனும் |
| ఋజుః | ருஜுஃ | ஆஶ்ரிதர் விஷயத்தில் மனோவாக்காயங்களாலே ஏகரூபனும் (அன்றிக்கே)ஆஶ்ரிதருடைய இச்சைக்கு அநுகுணமாக வர்த்திப்பவனும் |
| శుచిః | ஶுசிஃ | ப்ரதிப்ரயோஜன மன்றிக்கே உபகரிக்கும் பாவசுத்தியை யுடையவனும் (அன்றிக்கே) நித்யஸம்ஸாரியைத் தன்ஸம்பந்தத்தாலே நித்யஸூரிகளோடொரு கோவையாக்கவல்ல பாவநனும் |



| | | |
|---|---|---|
| మృదుః | ம்ருதுஃ | ஆஶ்ரிதர் விஶ்லேஷத்தில் ஆற்றமாட்டாதவனும் |
| దయాళుః | தயாளுஃ | ஆஶ்ரிதர் துக்கத்தை ஸஹிக்காதவனும் |
| మధురః | மதுரஃ | ஆஶ்ரிதருக்கு போக்யவஸ்துவும் |
| స్థిరః | ஸ்திரஃ | ஆஶ்ரித ரக்ஷணத்தில் நிலையுடையவனும்(அன்றிக்கே)ஆஶ்ரிதாபராதங்களால் அவிக்ருதனாயிருப்பவனும் |
| సమః | ஸமஃ | ஆஶ்ரயிக்குமிடத்தில் ஜாதிகுணமுதலிய பேதத்தைப்பாராமல் ஸர்வ பூதங்களுக்கும் ஸமனும் |
| కృతీ | க்ருதீ | ஆஶ்ரிதருடைய கார்யத்தைத்தானே முடிக்குமவனும் |
| కృతజ్ఞః | க்ருதஜ்ஞஃ | ஆஶ்ரிதர் விஷயத்தில் தான் எல்லா உபகாரத்தைச் செய்தும் அவர்கள் செய்த அல்போபகாரத்தையே பெரிதாக நினைத் திருப்பவனும், (அன்றிக்கே) அவர்கள் திறத்தில் தான்செய்யப் பெறுதகுறையைநினைத் திருப்ப வனுமான |
| త్వమ్ | த்வம் | நீ |
| స్వభావతః | ஸ்வபாவதஃ | ஸஹஜமாகவே |

( సమస్తకల్యాణగుణామృతోదధిః )
( ஸமஸ்தகல்யாண குணம்ருதோததிஃ )

| | | |
|---|---|---|
| సమస్త | ஸமஸ்த | அஶேஷமாயிருக்கிர |
| కల్యాణగుణ | கல்யாணகுண | கல்யாணகுணங்களுக்கு |
| అమృతోదధిః | அம்ருதோததிஃ- | அம்ருத ஸாகரம்போலே அநுபவிக்கவிழிந்தாருக்குக்கரைகாண வொண்ணாதவனும்பரமபோக்யமாகவும் |
| అసి | அஸி | ஆகின்றாய் |

தாத்பர்யம்.— ஸகலத்தையும் தன்வசத்திலேவைத்து நடத்துகிறவனும், ( அன்றிக்கே ) அநுகூலர் விஷயத்தில் தாழநிற்பவனும், ப்ரியவசனத்தோடு தன்னையும் தன்னுடைமையையும் ஆஶ்ரிதருக்குக் கொடுப்பவனும், தான் ஸர்வாதிகனாயிருந்தும், தாழ்ந்தவரோடு கலந்திருக்கையாகிற ஸௌசீல்ய குண முடையவனும், ஆஶ்ரிதர் விஷயதகில் மனோவாக்காயங்களாலே ஏகரூபனும் ( அன்றிக்கே ) ஆஶ்ரிதருடைய இச்சைக்கு அநுகுணமாக யிருப்பவனும், ப்ரதிப்ரயோஜந மன்றிக்கே

உபகரிக்கும் பாவசுத்தியுடையவனும், (அன்றிக்கே) நித்யஸம்ஸாரியைத் தன்ஸம்பந்தத்தாலே நித்யஸூரிகளோடொரு கோவையாக்கவல்லபாவனனும், ஆஶ்ரிதர்விஶ்லேஷத்தில் ஆற்றமாட்டாதவனும், ஆஶ்ரிதர்துக்கத்தை ஸஹிக்காதவனும், ஆஶ்ரிதருக்கு உபாயதசையிலும் போகதசையிலும் போக்யவஸ்துவா யிருப்பவனும், அந்தரங்கர் விலக்கிலும் ஆஶ்ரிதரைக் கைவிடாமல் ரக்ஷிப்பவனும், (அன்றிக்கே) ஆஶ்ரிதாபராதங்களால் அவிக்ருதனு யிருப்பவனும், ஆஶ்ரயிக்கு மிடத்தில் ஜாதி குண முதலிய பேதத்தைப் பாராமல் ஸர்வஸமனும், ஆஶ்ரிதருடைய கார்யத்தை யெல்லாம் தானேமுடிக்குமவனும், ஆஶ்ரிதர்விஷயத்தில் தான் எல்லா உபகாரத்தைச் செய்தும் அவர்கள்செய்த அல்போபகாரத்தையே பெரிதாக நினைத்திருப்பவனும், (அன்றிக்கே) அவர்கள் திறத்தில் தான்செய்யப் பெருத குறைவை நினைத் திருப்பவனுமான நீ ஸஹஜமாகவே ஸகலமான கல்யாண குணங்களுக்கும் ஆஶ்ரயமான க்ஷீரஸாகரம் போலே அநுபவிக்க விழுந்தாருக்குக் கரைகாணவொண்ணுதவனும், நிரதிஶயபோக்யமாகவும் ஆகின்றாய். ... (கஅ)

அவதாரிகை.— இக்குணங்களுக்கு ஸங்க்யை யில்லாதது போல ஓரோகுணங்களுக்கு அவதியில்லை என்கிறார். ... ... ⁕

ஶ்லோ॥ ఉపర్యుపర్యబ్జభువోऽపి పూరుషాన్
ప్రకల్ప్య తే యే శతమిత్యనుక్రమాత్।
గిరస్త్వదేకైకగుణావధీప్సయా
సదా స్థితా నోద్యమతోऽతిశేరతే॥

உபர்யுபர்யப்ஜபுவோபிபூருஷான்
ப்ரகல்ப்யதேயேஶதமித்யனுக்ரமாத்,
கிரஸ்த்வதேகைககுணாவதீப்ஸயா
ஸதாஸ்திதாநோத்யமதோதிசேரதே.

| | பதம். | ப்ரதிபதம். |
|---|---|---|
| అబ్జభువోऽపి | அப்ஜபுவோபி | சதுர்முகனுக்கும் |
| ఉపర్యుపరి | உபர்யுபரி | மேலேமேலே |
| తే యే శతమితి | தேயேசதமிதி | தேயே சதமென்று வேதத்தில்சொல்லு (கிற |
| అనుక్రమాత్ | அநுக்ரமாத் | க்ரமத்தாலே |
| పూరుషాన్ | பூருஷான் | மநுஷ்யகந்தர்வாதியாகப்ரஹ்மாவினளவாக புருஷர்களை |



| | | |
|---|---|---|
| ప్రకల్ప్య | ப்ரகல்ப்ய | கற்பித்து |
| (త్వదేకైకగుణావధీప్సయా) | | |
| (த்வதேகைககுணாவதீப்ஸயா) | | |
| త్వత్ | த்வத் | தேவரீருடைய |
| ఏకైకగుణ | ஏகைககுண | ஓராநந்தகுணத்தினது |
| అవధీప్సయా | அவதீப்ஸயா | எல்லைகாணவேண்டுமென்கிறஇச்சையா (லே |
| సదా స్థితాః | ஸதாஸ்திதாஃ | ஸர்வகாலத்திலும் இருக்கிற |
| వేదగిరః | வேதகிரஃ | வேதங்கள் |
| ఉద్యమతః | உத்யமதஃ | ஆநந்த குணத்தின் எல்லையைக்காணத்தொடங்குவதில் நின்றும் |
| నాతిశేరతే | நாதிசேரதே | இன்னும் ஒழிகிறதில்லை. |

தாத்பர்யம் — ஓகல்யாணகுணநிதியே! உனது அநந்தகல்யாணகுணங்களில் ஆநந்தகுணமொன்றினுடையஎல்லையைக்காண்கையிலே இச்சையாலே நித்யங்களான வேதங்கள் சதுர்முகனை மனுஷ்யகோடியிலே நிறுத்தி அவனுக்கு மேலும் மேலும்மனுஷ்யகந்தர்வாதி ப்ரஹ்மாவினளவாகப் புருஷர்களைக்கற்பித்து ஒருவருடைய ஆநந்தகுணத்தினும் ஒருவருடைய ஆநந்த குணத்தை ஶதகுணம் அதிகமாகக் கற்பித்துச்சொல்லிஇவ்வாறு ஸ்துதித்தும் ஆநந்த குணத்தினுடைய எல்லையைக்காணமாட்டாமல் இன்னும் உத்யோக தசையிலேயே யிருக்கின்றன. ... (ககூ)

அவதாரிகை.— கீழ்ச்சொன்ன குணங்களுக்குப் போக்தாவான ஆஶ்ரிதர் பெருமையை அருளிச் செய்கிறார். ... ... ⁕

ஶ்லோ॥ త్వదాశ్రితానాం జగదుద్భవస్థితి
ప్రణాశసంసారవిమోచనాదయః।
భవంతి లీలా విధయశ్చ వైదికా
స్త్వదీయగంభీరమనోऽనుసారిణః॥

த்வதாஶ்ரிதாநாம்ஜகதுத்பவஸ்திதி
ப்ரணாசஸம்ஸாரவிமோசனாதயஃ
பவந்திலீலாவிதயஶ்சவைதிகா
ஸ்த்வதீயகம்பீரமனோனுஸாரிணஃ.

| | பதம். | ப்ரதிபதம். |
|---|---|---|
| త్వదాశ్రితా (నాం | த்வதாஶ்ரிதா (நாம் | தேவரீரை ஆஶ்ரயித்திருக்கிற ப்ரஹ்மருத்ராதிகளுக்கும், ஸநகாதிகளுக்கும் முக்தருக்கும் |

